ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

காவடிச்சிந்து வர்ணமெட்டுகளும்,
இன்னும் பலவர்ணமெட்டுகளடங்கிய

# சிவராமாமிர்த
# சஞ்சீவி ஜாவலி.

இவை
கும்பகோணம்
புஸ்தகவியர்பாரம், K. V.
கதிர்வேல்பிள்ளை அவர்களால்
சர்வசமையமாய் பஜனை செய்பவர்குரியதாய்
இயற்றியது.

ஷை யூர் புஸ்தகவியாபாரம்,
கோ. ஸ்ரீனிவாசகோன் அவர்கள்
வேண்டுகோளின்படி,
கோளப்பஞ்சேரி,
செல்லப்பமுதலியாரவர்களது

சென்னை
ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

[விலை] 1917. [அணா-4.

ஸ்ரீ
ஸ்ரீராமஜெயம்.

காவடிச்சிந்து வர்ணமெட்டுகளும்
இன்னும் பலவர்ணமெட்டுகளடங்கிய,

# சிவராமாமிர்த
# சஞ்சீவி ஜாவளி.

இவை
கும்பகோணம்
புஸ்தகவியாபாரம், K. V.
**கதிர்வேல்பிள்ளை அவர்களால்**
சர்வசமையமாய் பஜனைசெய்பவர்குரியதாய்
இயற்றியது.

---

ஷை வியாபாரம்,
**கோ. ஸ்ரீனிவாசகோன் அவர்கள்**
வேண்டுகோளின்படி,
கோளப்பஞ்சேரி,
**செல்லப்பமுதலியாரவர்களது**
சென்னை
ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

இதன்விலை] 1917. [அணா-4



ஸ்ரீ
ஸ்ரீராமஜெயம்.

காவடிச்சிந்து வர்ணமெட்டுகளடங்கிய

# சிவராமாமிர்த
# சஞ்சீவி ஜாவளி.



## வெண்பா.

சிவருமாமிர்தஞ் செபித்தவர்க்கே யிப்புவியில்
புவனவிட்டுசாயூட்சம் பொருந்துமே—கவனமதாய்
சஞ்சீவிஜாவளியை சந்ததமும் சொல்லிசொல்லி
அஞ்சலித்தெ ஐங்கரனே போற்றி.

## உபயசத்தி விநாயகர் துதி.

நெஞ்சமே யென்றமெட்டு.

பல்லவி.

சித்தமெ யிந்தகாயமழிவது நிச்சயமெ.

அநுபல்லவி.

சிவனூர்மகிழ் உபயவிநாயகறை தொழும் என். சித்த

சரணங்கள்.

முத்தியழிக்கு மூலாதரபொருள்
முருகனுக்கு முன்னுதித்த அருணசலா
பாலறைதுதி சித்த

பாசாங்குஜதற பக்த்தர்கிருபாகற-அதை
பாடிகொண்டாடி உனைநாடி
துதிக்கும்-யென் சித்த

கதிர்வேலன் சொல்லாலே
கருணைசெய்வாய் மேலே
கரிமுகனே அரிமருகா
கடவுள்முத லவனையே துதி. சித்த



## சுப்பிரமணியர் துதி.

### ஆள்ளியள்ளிக்குடிக்கும் யென்றமெட்டு.

பல்லவி.

சண்முகாயென்றுநீயென்னேறமும்சொன்னல்ஜென்மசாபலியமாகுமே
பாபம் போகுமே—ஜென்ம
பாபம் போகுமே

சரவணபவநமசிவாய மென்சாற்றினல்
ஆருசாயூட்சந் தருமே சண்

அசூறரைகொன்றுமே சுறரைமுன் கார்த்திட்ட
ஆருமுகவேலனே—உமைபாலனே
ஆருமுகவேவனே

ஆதரிநாதா யேதுமுன்வாதா
சூதல்லவேதா யேசாமிநாதா சண்

வள்ளிகாகவே தினேகொல்லையிலேசென்ற
புள்ளிமயில்வீரனே—அதிதீரனே
புள்ளிமயில்வீரனே

வாசவர்முனி நேசர்கள்புகழ்
யீசன்மகனே தாசனேக்காரும் சண்

கதிர்காமநகர்தனிலே கந்தைய்யாஉன்னிடவிந்தையைசொல்லபோகுமோ
என்னலாகுமே—விந்தை
என்னலாகுமே

எதிர்முன்வந்து ஏழையுமான
கதிர்வேல்தன்னே கார்த்திடநீரும். சண்

## ஸ்ரீராமசுவாமி துதி.

### ராகூசிவாகத்தில் யென்றமெட்டு.

பல்லவி.

ராமநாமமெ நவின்றுலேதினமெ
நம்பினபேருக்கு பேரின்பம்வருமெ.

அநுபல்லவி.

தாமதமில்லா யென்னிடமனமே-அந்த
தெசரதபாலனே துதித்தாலேகுணமே. ரா

சரணங்கள்.

அகலிகைசாபத்தை அன்றுதீர்த்தாறெ
அண்டினோர்பாபத்தை யென்றும்தீர்ப்பாறெ
கலியுகமதில்வறெ கடவுளாம்பாறெ
காருண்ணியநேத்திர கண்ணனோறெ ரா

கோபண்ணுவுக்கு கொடுத்தார்பொருளன்று
குழந்தையால்நவாப்பு முன்னெதான்சென்று
தாபபடுமந்த கதிர்வேல்பதம்விண்டு
தனையனேகார்ப்பீர் தயவுமிககொண்டு. ரா

## ஸ்ரீராமமந்திர உச்சரிப்பு.

### அள்ளியள்ளிகுடிக்கும் யென்றமெட்டு.

ராமாராமாயென்பதே அஷ்டாக்ஷரத்தினில்
தாரகமந்திரநாமமே—நல்லநேமமே
தாரகமந்திரநாமமே
தனித்துஉருவு ஆயிரம்செப்பிடில்
தருமெவருமே சாயூக்ஷ்சபதவி ராமா

அரசன்தெசரதற்கு பிள்ளையாய்யானதும்
அரிகோவிந்தமுகுந்தனே—வைகுந்தனே
அரிகோவிந்தமுகுந்தனே
அம்பரிஷிமுதல் துருவன்பிரகலாதன்
ஆடியெபாடிக்கொண் டாடியேதுதித்த ராமா

கோபாலாயென்றவுடன் பஞ்சாலிக்குதயில்
கொடுத்தமணிவண்ணனே யென்கண்ணனே
கொடுத்தமணிவண்ணனே
கோவர்த்தனகிரி தன்னையேதாங்கிய
ஆபத்தைதீர்த்த கோபிகள்லோலனே ராமா

மாலைவிஜயனுக் கண்ணாளையிலே தந்த
மாருதிதூதுகொண்டவா—யெனாண்டவர்
மாருதிதூதுகொண்டவா

மைந்தன்கதிர்வேலன் யிந்தபதத்தாலே
உந்தனைவேண்டியெ அந்தமடையவே. ராமா

## அனுமார் துதி.

காமசறசமையல் யென்றமெட்டு.

ராமதூதனான மாருதி யென்னை
றெட்சிதருளுவாய் நீகெதி
கொமகன்சுக்கிரீபன் குறைகளைசொல்லியே
கொல்லராமரிடத்தில் வாலியைதள்ளிய ராம

அலைகடல்தன்னையெ தாண்டிஞய்-யங்கு
அன்னைசிதையை காணவேண்டியனாய்
விலைமதியில்லாத வேந்தறக்கர்லெங்கையில்
வாலைசுருட்டிசிம்மாசனத் துக்குமேல்குந்தினாய் ராம

மதுவனம்தன்னையே அழித்தாய்-ஜம்பு
மாலிபஞ்சவர்களை வதைத்தாய்
யெதிர்வந்தஅஷ்யர்கள் யெகஅசுரர்கள்
அதிரும்படிஅடித்த ஆஞ்சநேயனேஐயா ராம

கோட்டைதனைவாலினல் கொளுத்தியங்கு
கொல்லவந்தறக்கறை கீழ்விழுத்தி
கேட்டராமனுக்கு சூடாமணியைதந்து
கிருபைசெய்வாய் கதிர்வேல்மனதில்குடியிருந்து. ராம

## சங்கரர் துதி.

ஆள்ளியள்ளிக்குடிக்கும் யென்றமெட்டு.

யீசாயென்று மனமேகூசாமல் நீசொன்னல்
கையிலாசபதவிவாருமெ—பாபம்தீருமே
கையிலாசபதவிவாருமெ

யெங்குமிறைந்து ரிஷபமேறிய
கெங்கையுமையுடன் திங்களும்சூடிய யீசா

கனகசபையில்நடன மாடுங்காமதகனனே
கண்டுதுதித்தால்போதுமெ—ஞானம்ஓதுமெ
கண்டுதுதித்தால்போதுமெ
கருணைபுரிவார் தினம்தவறுமல்
நினைமனமெ நிமிஷமீறுமல் யீசா

காலன்வறயஞ்சுவான் நீலகண்டன்தொண்டனேன்
மாலயன்காணுயதிசையம்—சொல்அவசியம்
மாலயன்காணுயதிசையம்
நால்வருமுன்னை நாடிதுதித்து
நல்லபதம்பாடி தில்லையடைந்தாரே யீசா

ஆலவாயில்நரியை பரியாக்கிமாணிகர்முன்
அதிசையங்காட்டிவைத்தவர்—மகாதேவர்
அதிசையங்காட்டிவைத்தவர்
யாருந்துணையில்லை கோரினேனேஉன்னை
காருங்கதிர்வேலை நேரினிலேவந்து. யீசா



## யீஸ்வரர் துதி.



### பூலஜானிலேலோ யென்றமெட்டு.

யீசாநடராஜா
ஜெகதீசாபரமேசா
உமைநேசாகைலாசா
வாசாபாபநாசாபிறகாசா யீசா

சந்திரசடாதரா
சங்கராகெங்காதரா
சரணம்கிருபாகாரா
அருள்தாராய்துயர்தீராய் யீசா

மான்மதுசூலகையா
மறைகள்போற்றுமெய்யா
மனதுயென்மேல்வையா
வையும்சாம்பசிவதுய்யா யீசா

சிவர்கூடந்தன்பாதமெ
செப்பினேம்கூடிநிதமெ
செங்கதிர்வேலன்பதமெ
சொல்லிவந்தோம்யிந்தவிதமே யீசா

=+=

## ஸ்ரீராமர் துதி.

### ஆவலாபாவலா யென்றமெட்டு.

கோவிந்தவைகுந்தநாதா-உன்னை
கோரினேனேவரந்தாதா கோ

சேவித்துநின்றேனே
ஸ்ரீறெங்கநாதனே
கோவர்த்தகண்ணனே
கோபாலமன்னனே
ஸ்ரீகோபிகள்லோலனேநாதாஉன்னை
கோரினேனேவரந்தாதா கோ

தசரதாபுத்திரா
தாசர்கள்மித்திரா
ஜானகிமனோகார
சரணம்கிருபாகரா-பதம்
செங்கதிர்வேல்சொல்லால்நாதா-உன்னை
கோரினேனேவரந்தாதா. கோ

=●=

### சித்தமிரங்கவில்லை யென்றமெட்டு.

சித்தம்வையுமெராமய்யா
சீதையையணைந்தகையா சித்

முத்தியழிக்கும்முதலே
முன்னேவந்தெனக்கருளே
யெத்திசையோர்புகழும்
புகழும் புகழும் புகழும் சித்

அரக்கர்கள்ஏமனே அரிபரந்தாமனே
ஆதரிராமனே ராமனே ராமனே சித்

தந்தைசொல்மாரா தருமகுணதீர
எந்தனைகோராய் நீகோராய் நீகோராய் சித்

பாண்டவர்சகாயனே பன்னிருநாமனே
ஆண்டருள்சீமானே சீமானே சீமானே சித்

செங்கதிர்வேலன்பதம் செப்புவோமெகிதம்
இங்குசொல்லேவினோதம் வினோதம் வினோதம் சித்

—*—

## சிவ சுப்பிரமணியர் துதி.

### நாலேநாலே யென்றமெட்டு.

காரும்காருங் கந்தய்யனே
கருணையென்மீதில்வைத்து நீரும்யென்னை கா

பாருமெஐயா ஆருமாமுக
தீரனேவந்து நேரிலே கா

சண்முகாநீ யென்முன்னெவா
சங்கரனுற்பாலனே யென்னை கா

வள்ளிதெய்வானையோடு
புள்ளிமயிலேரியே நீர் கா

திங்கள்வதனமங்களமுள்ள
செங்கதிர்வேலன்பாடினேன் நீர். கா

### மாசபையோர் யென்றமெட்டு.

வாரும்வேலனே என்முன் வா

வள்ளிதெய்வானை
மயிலுடனே முன்னே வா

காருமெந்தனை கருணைசெய்வாய்கந்தனே
கடம்பன்னிடும்பன் சூறர்களுடனேநீர் வா

அமரருக்காகவெ சூரனைவென்ற
ஆருமுகவேலனே யென்னை
காருஉமைபாலனே

அண்டினேறையாளும் தண்டம்புரிகிறேன்
யெண்டிசையோர்புகழ் தெண்டாயுதகையா வா

கெங்கையனிந்த சங்கறனுக்கு
உபதேசித்தநாதனே-கிருபை

வையுங்குருநாதனே
செங்கதிர்வேலவன் சங்கீதத்தினாலே
யிங்குஉரைத்தேன் யென்சாமிநாதனே. வா

# தசரதர் கைகேசியிடம் சொல்லுதல்.

## அருமைகண்மணியை யென்றமெட்டு.

ஸ்ரீமந்நாராயண னவன்தாண்டி-நமக்கு
ராமனாகபிறந்தாண்டி நா

காமனையீன்றவன் தாண்டி
கடலில்மச்சரூபமுங்கொண்டாடி
நேர்மையாய்ரமையாளண்டி
நேசமுடன்புத்திர சோபந்தீர்தாண்டி நா

வராகவுதாரங் கொண்டாண்டி-இந்த
வாள்நாடுதன்னை யுண்டாக்கிகொண்டாடி
நேராய்பிரகலாதன் தூணில்நின்றாண்டி
போராய்நரசிம்ம ரூபங்கொண்டாண்டி நா

வாமனரூபங்கொண்டாண்டி பலிசக்கரவர்த்தியை
வாசிமூவடி தானளந்தாண்டி
நேமபரசுராமன்தாண்டி-நமக்கு
நேயனாகபிறந்தாண்டி நா

வால்மீகர் சொல்லியதுதாண்டி-கலைகோட்டு
மாமுனிதன்னாலே யானும்பெற்றேண்டி
அல்லரசுபோல் வாழ்வாண்டி
அரிவித்தகதிர் வேல்சொல்தாண்டி நா

## சப்ததலககபியாரி யென்றமெட்டு.

வைகுந்தவாசகனே வானோர்புகழ்கோவிந்தனே
வணங்கினேன்முகுந்தனே ராம்-ராம்-ராம் வை

கையில்சங்குசக்கர காரணனேவந்தருள்
வையகந்தனை யலந்தவாமனனே
வாசவர்புகழும்நல்ல கோசலைபுத்திரனை
கேசவாவுனைபணிந்தேன் ராம்-ராம்-ராம். வை

# மாருதி துதி.

## ஆனந்தபயிரவி தாளம்.

பல்லவி.

அஞ்சனாதேவிபுத்திரா-அனுமானே
ஆதரித்தென்னை காரா.

அநுபல்லவி.

தஞ்சமென்றுன்பாதந் தாளிணையேநிதம்
தான்பணிந்தேன் வினோதம்
தயவுசெய்பாபம் அதம். அஞ்

சரணங்கள்.

அன்னைவயற்றிலிருந்து வெளிவராமல்
அடைந்தீர் கவசகுண்டலம்
ஆதவன்றதமது பழமென்றுபாய்ந்து
அவரிடத்திலுபதேசம் பெற்றுமேவந்த அஞ்

இந்திரன்பானுபுத்திர னிடத்தினில்
மந்திரியாகயிருந்து
தந்திரமாய்அந்தனர் வேடபூண்டுராமரை
சரணமடைந்துவாலிதனை கொல்லசெய்தயந்த அஞ்

ஜானகிதன்னைத்தேடி-சமுத்திரத்தை
தாண்டிடவேஓடி
கானசுறசை யாங்காரதாரையை
காதினில்நுழைந்து வயற்றைகிழித்துவந்த அஞ்

லெங்கனியைவதைத்து-உள்ளங்குசென்று
யெங்கும்சீதையைகுரித்து
தங்கும்புஷ்ப்பசோலை விளங்கும்சோகவனம்
அங்குசென்றுசீதைமுன் தங்ககணையாழிதந்த அஞ்

மதுவனந்தன்னையழித்து-யங்குவந்த
ஜம்புமாலிதன்னைவதைத்து
யெதிர்வந்தயிந்திரசித்து யேகியபின்ராவணன்முன்
யேகமாய்வாலைசுத்தி யிருந்தாய்அவருக்குமேலே அஞ்

லெங்கைகோட்டையை கொளுத்தி-யெதிர்த்துவந்த
ருக்ஷதரைகீழ்விழுத்தி
செங்கையில்சூடாமணி அங்குராமர்க்குயீந்து
செங்கதிர்வேல்பதத்தை தங்கியேனுன்படித்து. அஞ்

## வ்ஸ்த்தபுதாரகு யென்றமெட்டு.

ராமமந்திரஜெபநீதமே-நீ
நம்பிசெய்தால்வரும்பதமே

தாமதமன்றிராமராமா யெனதனித்துமெ-உரு
நினைத்துயாயிரம் யினைத்து
சொல்லிடில்தினத்திலுமதை
நம்பிசெய்தால்வரும்பதமெ ராம

அரக்கரிகாலன் அரியரி யென்றுல்ண்டினோர்கூலன்
ஜானகிலோலன் தசறதபாலன்
ஆதவவேல்சொல்லால்
நம்பிசெய்தால்வரும்பதமெ ராம

## காவடிச்சிந்து,

## என்னடிநான்பெற்றமங்கை யென்றமெட்டு.

கருணைசெய்யும்பரந்தாமா யதிபூமா நல்லசீமா தக்க
காலமிதாகும் றெகுராமா
காலன் வருமனுந்தன் சிலன் பணிந்தேனென்னை
கார்த்திடநீர்வாரு மெய்யா உந்தன்
கழலடிபணிவேன ரா மய்யா

வாசுதேவர்யீன்றபாலா கோபாலா கோபிலோலா அன்று
வதைத்தீர்கமுசநிட காலா
வாணவர் முதலோர்தேவர் வேணவர் பணியுமுகுந்த
வைகுந்தவாசனே வாரும் வட
வெங்கிடேசனே துயர் தீரும்

அறக்கறைவென்றிட்டவீரா ஒய்யாரா கெம்பீரா உன்னை
அண்டினயெந்தனைக் காரா
அரிநாரா யணகேசவா அகலிகை சாபந்தீர்த்தவா
ஆதரியும்றெகு நாதனே யெந்தன்
அன்னைஜானகி சமேதனே

சங்குசக்கரஐயனே மலர்துய்யனே என்மெய்யனே புகழ்
சாரங்ககோதண்ட கையனே
செங்கதிர் வேலன்சொல்லுஞ் சங்கீத மொழியினாலே
சிந்தித்தேனுண்டருள் கண்ணனே இந்த
சிறுவனேக்கார்முணி வண்ணனே.

## பட்டாபிஷேகம் யென்றமெட்டு.

அண்டரைகார்க்க லெங்கைசென்றுதெச
கண்டனைகொன்றிட்ட கோதண்டபாணி
யண்டமுண்டமாயனே ராமா
யகிலாண்டநாயகனே
ராமய்யனே-நீமெய்யனே-ரெட்சித்தருள்-துய்யனே

தந்தைசொல்லைமாரு மைந்தனென்றுபேறை
விந்தையுடன்கொண்டா ராமசந்திரனே ஐயா
வந்தருள்தாருமெய்யா கோ
விந்தமுகுந்ததுய்யா
ராமய்யனே-நீமெய்யனே-ரெட்சித்தருள்-துய்யனே

பக்ஷிவாகனனே பார்த்திபன்தோளனே
லக்ஷிமிநாதனே யச்சுதனேநீர்
பக்ஷம்வைத்துமே காரும்-யென்
அச்சந்தனையே தீரும்
ராமய்யனே-நீமெய்யனே-ரெட்சித்தருள்-துய்யனே

எங்கும்நிரைந்த செங்கண்மாலரியே
சங்குசக்கரத்தோட் யிங்குவந்தாளும்
செங்கதிர்வேலனிட-பத
சங்கீதம்நானும்பாட
ராமய்யனே-நீமெய்யனே-ரெட்சித்தருள்-துய்யனே.

## ஆறெசைய்யா யென்றமெட்டு.

அருளையா ஆறுமுகனைதயா அன்பர்கள்மெய்யா
ஆசைமுருகேசா வள்ளிநேசா
அருளடியைதாதா அபயஞ்சாமிநாதா
அருமைபொர்ப்பாதா அடியென்மீதுவாதா
ஆவிஉன்னைதாவினதால்
மேவினனே சேவல்கொடி அரு

சண்முகா யென்முகப் பார்விேனுதா
சங்கரனார்பாலா செங்கதிர்வேலா
மங்கை குஞ்சரிலோலா
யெங்கும்நிறைந்தமேலா
சாற்றினேனே போற்றினேனே
சுவாமிமலை சுற்றினேனே. அரு

ஷை மெட்டு.

ராமா ராமா ரக்ஷித்தருள்பூமா
நம்பினேன் கோமா ராமா
சீமாசீதையின்மனோகரா
சிருவன்யென்னேக்காரா
சிந்தித்தேன்வரந்தாரா
செப்பியேமொழிகூரா
கண்ணனேவுன் பொன்னடியை
யென்னிருதம் தன்னில்வையும் ராமா
அன்னேசொல் மாறுராமய்யா
அடியேனே காரய்யா
அருமைகோ தண்டகையா
ஆதரிப் பிரேமெய்யா
அரிகரியே முரகரியே
ஆதரியே நீகெதியே ராமா

காவடிச்சிந்து.

காட்டில்வந்துநீ யென்றமெட்டு.

அண்டரானதேவர் கொண்டியாடதெச
கண்டனிட காலனே யெந்தன்
அன்னேசீதை லோலனே
தெண்டகாறனத்தில் சென்றீர்தாய்மொழிக்கே
தெசரதரின் பாலனே
நந்தகோவிந்த வைகுந்தவாசனை
நாராயண நாமமே அதை
நாடினலே நேமமே
பந்தபாசவினே தொந்தங்களேநீக்கி
யந்தமழிக்கி க்ஷேமமே
அம்பரிஷிதுருவன் பிரகலாதன்னுன்னே
நம்பிதுதித் தாலே அடைந்தார்
சொர்க்கமும் மேலே
கிம்புராதிநாரத தும்புறர்கள்உந்தன்
கீர்த்திசொல்லுவ் தாலே
சங்குச்க்ரகையன் சாதுபோற்றமெய்யன்
யெங்கும்நிறைந்த ஐயனே யென்னே
யாளுரா மையனே
செங்கதிர்வேலன் சங்கீதத்தினலே
செபித்தேன் கோதண்ட கையனே.

## இராகம்-தேசிகம்-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

திருத் தனிகைவளரு முருகோனே நின்
திருவடி பணிந்தேனே சீமானே
செய்குவாய் அருள்தானே
திருமால் மருகோனே (தனி)

சாமி நந்திவாகன னருள்பாலா உனை
நம்பினேனே நெடுநாளாய் உன்னுளாய்
நவிலறு முறைகேளாய்
நளின மலர்த்தாளா (நந்தி)

முனம் வந்தஅசுரர்களை வென்று கானில்
வள்ளிதினையில் சென்று முன்னின்று
வாதுமொழியைப்பு கன்று
மணம்புரிந்தா யன்று (வந்த)

சிறு மைந்தன்கதிர்வேல்சொற் பாடி உந்தன்
மாமலரடி தேடி யான்சூடி
மாதவருடன் கூடி
மனமுடன்கொண் டாடி மைந்த



## காரணமே யென்றமெட்டு.



நாரணனே நல்லருள்தா பூரணனே
பாரணஞ்செய் உன்னடிமை
பக்த்தர்முத்தர் சித்தர்துதிக்கும் நா

சாரங்கனேசங்கு சக்ராங்கதனே
பாரங்கும்புகழ் குடந்தைவாழும்
பக்த்திமுக்த்தி சித்தியளிக்கும் நா



சேவித்தேனே சிறம்பணிக்கூவித்தேனே
ஆவியுந்தன்மீதில் வைத்தேன்
ஆராவமுதனே ஐயா நா

அரிகரியே யடியேனை யாதரியே
கரிமுன்வந்து காத்ததுபோல்
கதிர்வேலன் தன்னைக்காரும் நா



### தையலே சையோகம் யென்றமெட்டு.

தாமோதராநந்த கோவிந்தவைகுந்த
சாமியருள்புரிவீர்-யான்
சறணம்வரந்தருவீர் தா

நேமமுடனுன்னை நித்தியந்துதித்தேனே
நேயாயேமாயா உபாயாஉனைத்தானே
நினைத்தேன்யென்னைக்காருமே-கெருடன்
யேரியிங்குவாருமே தா

சங்குசக்கரபாணி சாரங்ககோதண்டபாணி
யெங்குநிறைந்து விளங்கியேதங்கும்
நரசிங்கரூபங்கொண்டவா-பதம்
செங்கதிர்வேலாண்டவா. தா

### அன்னமே உன்னை யென்றமெட்டு.

காண்டிபன்துணை பாண்டவர்தூது
கண்ணனே மணிவண்ணனே
ஆண்டருள் காளிங்கதாண்டவ
ஐயனே சம்பண்ணனே கா

கோபிகளிடம்லீலை காட்டியேகொடுத்தாய்
நீசொர்க்கந் தன்னையே
பாவியாகிய யெந்தனைகார்த்து
பரமபதந்தா முன்னேயே கா

காரணப்பொருள்நாரணா-உந்தன்
கருணையடியைத்தாருமே
பாரணஞ்செய்தேன் தீரனேயென்னை
பாதுகார்த்திடவாருமே கா

கெங்கைமுடியில் சூடியயந்த
சங்கரனுக்குத் தோளனே
தங்கியேயதுஞ் சொன்னேனே கார்ப்பாய்
செங்கதிர்வேலனே. கா

### அச்சாம்மறெலா யென்றமெட்டு.

ராமமந்திரம் சொல்வீரே
ஏமவாதை வெல்வீரெ

நேமமுள்ளவரே நித்தியம்துதிப்பீரே
நேயரெ நேயரெ நேயரெ நீர் ராம

பக்தியுடன்தேடி பஜனைசெய்துகொண்டாடி
பாருமெ பாருமெ பாருமெ நீர் ராம
சவுரிமுதல்ஜடாயிக்கி சாயூக்ஷசந்தந்தாரெ
சாமியெ சாமியெ சாமியெ தான் ராம
நித்தியமுனைத்துதிக்கும் நேசன்கதிர்வேலன்பதம்
பக்த்தியெ பக்த்தியெ பக்த்தியெ பார். ராம

## எக்காலத்திலும் யென்றமெட்டு.

தாளம்-ரூபகம்.

பல்லவி.

யெப்போதும் உனையெ நினைப்பேன்
ஏழைனனே யெப்

அநுபல்லவி.

தப்புமுறை யில்லாருன தசரதரின்
பாலசீலரெனன் யெப்

சரணங்கள்.

காமனை யீன்ற கோமனை அதி
சோமனை யசுற யேமனை
பூமனை துதி நேமனை பலி
வாமனை றெகு ராமனை னன் யெப்

சீலனே அதி லோலனே ராவணக்
காலனே கோசலை பாலனே
தாளனே துயர் மேலனே தேவர்க்
கூலனே பார்த்திபன் தோளனே னன் யெப்

ஸ்ரீத்திரா பதியில் வாழும்தீரா யென்னை
காராய் வந்து நேராய்
வாராய் யருள் கூராய் முன்னே
பாராய் ஸ்ரீமந் நாராயணா யெப்

நரசிங்கத்தை சாமள யங்கத்தை பொருள்
துங்கத்தை நகை தங்கத்தை
சங்கத்தை புகழ் லெங்கையில் சென்ற
செங்கதிர் வேல்துதி ஸ்ரீரங்கநாதனை. யெப்

## காங்கிரோஜீ யென்றமெட்டு.

ராமமந்திரம் சொன்னவற்கு
யெமவாதையில்லையெ
யெமவாதையில்லையெ மரு ஜெனனமில்லையே ராம

நித்தியம்யெப் பொழுதும்சொன்னல்
நேசிக்கிமருள்
நேசிக்கிமருள் யதை வாசிக்கப்பொருள் ரா

அரக்கரில் விபூஷணருக்கு
ஆசீர்தந்தாரெ
ஆசீர்தந்தாரெ லெங்கை யங்குசென்றாரே ரா

அஞ்செழுத்தும் மூன்றெழுத்தும்
அஷ்டாக்ஷசறமெ
அஷ்டாக்ஷசறமெ அதிலே தாரகமே ரா

கதிர்குலத்தில் பிறந்தயந்த
காரணப்பொருள்
காரணப்பொருள் கதிர் வேலுக்குயருள். ரா

---

## மணமயிலமிட்டே யென்றமெட்டு.

ஆதிநாராயண ஸ்தீராபதியைவிட்டு
அயோத்தியில் வந்தராமா
நீதியாயாண்ட தெசரதசக்கரவர்த்தி
நேர்மையுள்ள புத்திரபூமா
யோதியுள்ள ராவணனைக்கொன்றமே
கீர்த்தியடைந்த ரக்கர்யேமா
அய்யனே மெய்யனே யெனை
யாதரிக்க வாரும்சீமா ஆதி

ஐடாகோதண்டகையா உன்
அண்பறைகாரும் ராமையா
அபயமில் லாமலேமெய்யா
ஆதரிப்பீர்நீர்துய்யா

சுறர்கள்லாலே புவியின்மேலே
பிறந்ததாலே கதிர்வேல்சொல்லாலே
செபித்தேன் உந்தனைகோமா. ஆதி

## பியாரிமோகனு யென்றமெட்டு.

ரெகுராமா நம்பினேன் யென்னை
காரும் ரெகு

மாமலர்பாதமுள்ள மங்கைசீதை
அன்னையும்
தாமதமில்லாமல் வாரும்தனையகிட
முன்னையும் ரெகு

தெசரதர்க்குநீர்உதித்து தெசமுகனை தான்
வதைத்தீர்
தெசவுதாராதீரதய்யாரா தாசனைகாராதயவு
செய்நாரா ரெகு

சங்குசக்கரஞ் செங்கையில்கொண்ட
சாரங்கமுள்ள கோதண்டபாணி
செங்கதிர்வேலன்சங்கீதம்தன்னை யிங்குபடித்து
யினிஉன்னைனுணி ராமா



## பார்ஸி மெட்டு.

நம்புவாய்யென்மனமே ராமனைநீயுமே
நேமமுடன்பணிந்து நம்பு
யேமனைவென்றிடும்யம்பு
யென்னாளும்துதித்தால்தெம்பு நம்பு

அஷ்ட்டாக்ஷரம் பஞ்சாக்ஷரம்
அதிலேதாரக முள்ளத்தரம்
அஞ்செழுத்து மெட்டெழுத்துமெ
ஐயமுள்ள ரெண்டெழுத்துமெ நம்பு

ராவணசம்மாரதீரனே
ரெக்ஷிக்கதேவரை லெக்ஷ்சுமிசீதையால்
பாவலர்கள் புகழும்கெம்பீரா
பார்த்தனிட மித்திரு நம்பு

அங்கஜனையீன்ற ஐயனே
மடுவில்யானைமுன்னாதி மூலமாய்வந்திட்ட
செங்கதிர்வேல் பதமும்சொன்னேனே
செபித்துயிங்கு கின்னேனே நம்பு

நாகூர்தனிலே யென்றமெட்டு.

தெசவுதாரதீர தெசரதபாலவீர
ஜெயராமனே சீத்தாராமனே தெ

நேசமாய்பேரின்பவீடு நிச்சயமாய்தரும்
நித்தியகல்லியாணகுண சுத்தனருளைவரும்
பக்தியுடன்பணியும் பாலன்தன்னையேகார்க்கும
ஜெயராமனே சீத்தாராமனே தெ

அஷ்ட்டாக்ஷரதாரக ஐயன்நாமத்தைகொண்டு
அனுதினமும்துதித்தால் யகலும்பாபமேயின்று
கஷ்ட்டநிஷ்டூரம்விட்டு கழலடியைபணிந்தேன்
ஜெயராமனே சீத்தாராமனே தெ

கெதியுனை தவிரகிட்ட வில்லையேஐயா
கவுசலைபுத்திரா கிருபைவையும்ராமய்யா
கதியிதுவென்றடைந்த தனையன்முகத்தைபாரும்
ஜெயராமனே சீத்தாராமனே தெ

சங்குசக்கரம் சாரங்கம்பிடித்த
ஜனகராஜனிட வில்லதையொடித்த
சங்கீதமாரிபெய்யும் செங்கதிர்வேலன்பதம்
ஜெயராமனே சீத்தாராமனே தெ



இராகம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி.

முரஹரிமால்மருகா முருகையா
வரமருள்வாய்பாங்கிரி வாழ்மெய்யா

அநுபல்லவி.

கரமதில்வேல்பிடித்த மலர்க்கையா
பிரையணிகர்த்தனுக்குரைத்த முருகையா முர

சரணங்கள்.

நினைத்தபொழுதெனக் குன்பதத்தைக்கொடுத்திடுவாய்
நேசமாய்ப்பெண் பிசாசைத்தடுத்திடுவாய்
மனத்தைப்பிடித்துன்னடிக் கடக்கப்படுத்திடுவாய்

மத்தகனுக்கிளைய நீதா
நித்தியசுத்தமலர்ப் பாதா
முத்திநெறிக்கருணைத் தாதா

மூன்றுமுன்னுள்ளதோர் பொன்னடிபற்றினேன்
சற்றெனைக்காப்பாற்று முருகையா
வனத்திலுதித்ததினைக் குளத்தியிடத்திற்கணி முரு

மரத்தைத்தரித்தாலுந்தன் குணத்தைத்திருத்தியேமுன்
கனத்ததனத்தாலுந்தன் தனத்தைக்கவர்ந்திடவே
புனத்தின்பசிக்குதெனத் தினைத்தேன்புசித்திடவே

தந்திமுகத்தொடு வந்திடவே
சிந்தைமிகுந்தவள் நொந்திடவே
காந்தர்வம்புரியுங் குருவே

சந்ததம்வேலவன் செந்தமிழ்க்கிசைந்து
வந்தருள்சொந்த மயில்மீதையா. முரு

## காளியம்மன் துதி.

### ஸ்ரீராமா யென்றமெட்டு.

சங்கரிசாம்பவி சாமுண்டீஸ்வரி
சடாக்ஷரிபயிரவி தாளினியேகெதி
அம்பிகைகாருமே-அ-அ-அ
அம்மணி பெண்மணி கண்மணி நன்மணி அ

நர்த்தனசுந்தரி நாராயணி
நாரதரிஷிபுகழ் பூரணி
நாயகிநிர்த்தனி-நா-நா-நா
நாடினேன்தேடினேன் கொண்டாடினேன்பாடினேன் நர்

மாலிகபாலிசூலி
மாநிகரநகோலகாளி
மால்தங்கையனுகூலி-மா-மா-மா
மைந்தனுன்வந்தனம் செங்கதிர்வேல்தந்தனம். மா

### என்னையேன்னங்கு யென்றமெட்டு.

ராமனைநித்தியந்துதியே
நித்தியந்துதியே உனக்கு
நல்லகெதியெ வைகுந்தபதியெ ராம

பந்தபாசங்கள்போக்கும்
யெந்தவினையுமே நீக்கும்
அந்தமுடன் சொர்க்கமழிக்கும் ராம

விபூஷனன் பிரகலாதன்
வேந்தர் அம்பரிஷி
வேண்டியெ துதித்தஜயனும் ராம

பாண்டவரும் பஞ்சாலி
பக்த்திசெய்த கண்ணன்
கண்டிபன் துணைவனுவரே ராம

சங்குசக்கர தோளன்
யெங்குநிறைந்தனு கூலன்
செங்கதிர்வேலன் துதிக்கும். ராம

## ஜெயசாலியிவளிட யென்றமெட்டு.

ராமசிந்தனை நேமமுடன்செய்தால்
யேமவாதை யில்லையே - யில்லையே
யில்லையே - யில்லையே ராம

ஜெயரும்-சீதாராம - சிவராம
அரிராமனும் அந்த ராம

தாமதமில்லாதினந்தவருமல் ஜானகிமகிழும்
க்ஷேமமுடனேவானவர்களும் செப்பியேபுகழும் ராம

சோமனெளி போலயந்த
சாமள வர்ணனீயும்
சோதித்தெமீதினில் ஆதவவேலன்பதத்தால். ராம

## பூலஜானிலேலோ யென்றமெட்டு.

ராமநாமமே தினமே
நவிலுவாயே மனமே
நம்பினபேற்கு குணமே
நற்கெதியுள்ள யினமே
இனமேசென்னுல்லெகு நலமே ரா

கோதண்டமேந்தும் கையா
கோபாலநந்தன ஐயா
கோபியர்போற்றுந் துய்யா
குறையைதீர்ப்பாய் மெய்யா
மெய்யாதெய்வ ராமய்யா ரா

தெசரதர்க்கு பாலன்
தாசர்களனு கூலன்
ஜானகிமகிழ் லோலன்
தசக்கிரிவன் காலன்
காலன்ஆதிமூல சீலன் ரா

வானவர்போற்றும் கண்ணு
வணங்கினேன் மணிவண்ணு
பானுவேல்துதி மன்னு
பணிந்தேனே சம்பண்ணு
சம்பண்ணுவெண்ணை உரியில் திண்ணு. ரா



## நெஞ்சமெ யென்றமெட்டு.

ராமனை நீநம்புவாயெ மனமெ
நவிலும்நீதம் யகலும்பாபம்
நாரதர் முதல்தொழும் ராமனை

நேமமுடனே நித்தியந்தவராமல்
நீதியாக யோதினாலே
யாதிவைகுண்டந்தரும் ராமனை

அகலிகைஜடாயி அன்புள்ளவிபூஷணன்
அன்றுமுதல் யென்றுந்துதி
பன்றிரூபங் கொண்டயந்த ராமனை

பாண்டவர்சகாயனும் பக்த்தர்கடுநேயனும்
அகிலாண்ட பிர்மாண்ட
வைகுண்ட நாதனை ராமனை

யெங்கும்நிறைந்தவன் யெவற்றிலும்முள்ளவன்
செங்கதிர்வேல் சங்கீதத்தால்தங்கி
புகழயோங்கும் ஜெய ராமனை



யெப்போதானிறங்குமொ யென்றமெட்டு.

யென்றுடனே காண்பேனோ
யெந்தன் ஜென்மமீடேற — யென்று

கன்றுமாடுகள்மேய்த்தும் கரிமுன்வந்துகார்த்த
கண்ணனே மன்னனே
காருமணி வண்ணனே — யென்று

மச்சவுதாரங்கொண்டீர் மறையைகொண்டுதந்தீர்
அச்சுதா ரெக்ஷியும்
ஆதரித்திட வாரும் — யென்று

ஆலிலைமேல்பள்ளிகொண்டீர் அரக்கர்களையேவென்றீர்
ஆயனே மாயனே
ஆதலால்நான் பணிவேனே. — யென்று

முற்றிற்று.

இதில்கண்ட வர்ணமெட்டுகள்

கும்பகோணம். புஸ்தகஷாப் - K. V. கதிர்வேல்பிள்ளை அவர்கள்
வாணாதுறை - பொன்னுசாமிபிள்ளை அவர்கள்
றெட்டிதெரு-முனியாண்டிபடையாச்சார்அவர்கள்
காடுவெட்டிதெரு - அ. றெங்கசாமி படையாச்சார்அவர்கள்
வாணாதுறை - பக்கிரிபிள்ளை அவர்கள்
புஷ்ப்பவியாபாரம் - A. ரெங்கசாமி ஆழ்வார் அவர்கள்

இவர்களிடம் தெரிந்துக்கொள்ளலாம்.



இனி இரண்டாம்பாகம் கூடியசீக்கிரத்தில் வெளிவரும்.

உ

# புஸ்தக விளம்பரம்.

இதனால் சகலமான பேர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில், இதனடியிற் கண்ட புஸ்தகங்கள் யாவும் வேண்டியவர்கள் எமது விலாசத்திற்கு யெழுதிபெற்றுக்கொள்ளலாம்:—

| | | |
|---|---|---|
| மாட்டுவாகடம் தனி | 0 | 12 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 12 |
| ஷை 2-ம் சேர்ந்தது | 1 | 4 |
| அசுவசாஸ்திரம் தனி | 0 | 12 |
| ஷை 3-ம் சேர்ந்தது | 2 | 0 |
| ஸ்ரீரங்கமஹத்துவத்திரட்டு 20-சில்லரைச்சேர்ந்தது சுத்தப்பதிப்பு | 0 | 6 |
| தெலுங்குஅனுபோகவைத்தியம் 4-காண்டம் சேர்ந்தது | 2 | 0 |
| யாப்பருங்கலக்காரிகை புதிய பதிப்பு | 1 | 0 |
| சங்கீதஸ்வரபூஷணி | 0 | 12 |
| ஷை 2-ம் பாகம் | 1 | 0 |
| திருவள்ளுவநாயனார்நவரத்தின வைத்திய சிந்தாமணி 800-ம் கெவுனமணிவயது 100-ம் | 1 | 0 |
| சோதிடச்சில்லரைக்கோர்வை | 1 | 8 |
| சோதிட நவகிரகமாலை | 0 | 8 |
| சோதிட பாலபாடம் | 0 | 8 |
| ஜாதகரகசியம் | 0 | 12 |
| நூதன கலியாணப்பாட்டு | 0 | 4 |
| 32-கட்டளை ஒன்றாய்சேர்ந்த கட்டளைத்திரட்டு | 1 | 0 |
| பெரியமுகியத்தீன்மாலை 126 சயிட்டுள்ள புத்தகம் | 0 | 12 |
| நித்தியாநுஷ்டானவிதியும் திருவாராதனக்கிரமமும் | 0 | 4 |
| நிஷ்டாநுபூதி மூலமும்-உரையு | 0 | 12 |
| காவடிச்சிந்து உரை புதியபதிப் | 0 | 6 |
| தி-தி-அப்பாவுபிள்ளை இயற்றிய நன்னெறிஅரிச்சந்திரவிலாசம் | 2 | 0 |
| ஸ்ரீமத், இராமாயணசுந்தரகாண்டமென்னும் அதிநூதன பார்வதி இலங்காதகனம் புதிய பதிப்பு | 0 | 4 |
| 61-வருஷப் பஞ்சாங்கம் | 5 | 0 |
| கந்தபுராணம் மூலமும்உரையும் முதல்வால்யம் | 5 | 0 |
| ஷை 2-வது | 5 | 0 |
| சர்வார்த்த சிற்பசிந்தாமணி கிலேஸ் சுத்தப்பதிப்பு | 2 | 0 |
| ஆதிபருவ திருப்புகழ்ச்சிந்து காவடிச்சிந்து வர்னமெட்டு | 0 | 4 |
| புலிபாணிசோதிடம் | 0 | 10 |
| சாதகதெளிவானந்தமணி | 0 | 10 |
| சிவராமாமிர்த சஞ்சீவிஜாவளி | 0 | 4 |
| தெலுங்குபாஷைமீனாக்ஷி கலியாணம் | 0 | 12 |
| பாகசாஸ்திரம் | 1 | 4 |
| பச்சிலைவர்க பசுமூலியகராதி | 0 | 12 |

## அச்சியில் இருக்கும், புஸ்தகங்கள்.

கந்தபுராணம் திருப்கழ் காவடிச்சிந்து வர்னமெட்டு

பாகவதம் திருப்புகழ் காவடிச்சிந்து வர்னமெட்டு

திரிவிளையாடல் திருப்புகழ் காவடிச்சிந்து வர்னமெட்டு

ரெட்டிகுடி திருப்புகழ் காவடிச்சிந்து வர்னமெட்டு

திருப்புகழ் 500-பாட்டுக்கு மூலமும்-உரையும்

விலாசம்:— கோ. செல்லப்பமுதலியார்

55, நம்மாழ்வார்தெருவு சௌக்கார்பேட்டை போஸ்டு மதிறாஸ்.